46165

OL/2015/16-T-I, II

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2015

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## இஸ்லாம் I

**கவனிக்க :**

(i) **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(ii) **1** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான அல்லது மிகப் பொருத்தமான** விடையைத் தெரிவுசெய்க.
(iii) **உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.**
(iv) அவ்விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

**1.** இஸ்லாமிய நம்பிக்கைக் கோட்பாட்டைச் சுட்டும் அறபுப் பதம்
(1) ஷரிஆ (2) தீன் (3) பிக்ஹு (4) அகீதா

**2.** குப்ரு என்பது
(1) மதமாற்றம் (2) இறை நிராகரிப்பு (3) நயவஞ்சகம் (4) முகஸ்துதி

**3.** இஸ்லாமிய அகீதாவைப் பாதுகாப்பதற்கு உழைத்த அறிஞர்களை மட்டும் உள்ளடக்கிய தொகுதி
(1) இமாம் மாலிக் (ரஹ்), இமாம் அபுல் ஹஸன் அல் - அஷ்அரி (ரஹ்), இமாம் ஸுஹ்ரி (ரஹ்)
(2) இமாம் மாதுரீதி (ரஹ்), இமாம் அபூஹனீபா (ரஹ்), இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்)
(3) இமாம் அபுல் ஹஸன் அல் - அஷ்அரி (ரஹ்), இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்), இமாம் மாதுரீதி (ரஹ்)
(4) இமாம் அபுல்ஹஸன் அல் - அஷ்அரி (ரஹ்), இமாம் மாதுரீதி (ரஹ்), இமாம் ஸுஹ்ரி (ரஹ்)

**4.** சொல் சார்ந்த ரித்தத்திற்கு ஓர் உதாரணம்
(1) வட்டி எடுத்தல் (2) நபிமார்களை அவமதித்துப் பேசுதல்
(3) அல்-குர்ஆனை எரித்தல் (4) அல்லாஹ்வை விசுவாசம் கொள்ளாதிருத்தல்

**5.** அல்-மாஉத்தஹூர் என்பது
(1) சுத்தமாக்கும் தன்மை கொண்ட நீர் (2) சுத்தமான நீர்
(3) பயன்படுத்தப்பட்ட நீர் (4) அசுத்தமான நீர்

**6.** குல்லதைனுக்கு குறைந்த நீரில் ஒரு நஜீஸ் விழுந்துள்ளது. இருப்பினும் அதன் சுவை, நிறம், மணம் என்பவற்றில் எந்த மாற்றமும் நிகழவில்லை. இந்நீரை வுழுச் செய்வதற்கு
(1) பொதுவாகப் பயன்படுத்தலாம்.
(2) பயன்படுத்தக் கூடாது.
(3) பயன்படுத்தாதிருப்பது நல்லது.
(4) நிர்ப்பந்தமான சந்தர்ப்பத்தில் மட்டும் பயன்படுத்தலாம்.

**7.** பின்வருவனவற்றுள் பர்ளு கிபாயாவான ஒரு செயல்
(1) ஐங்காலத் தொழுகை (2) ரமழான் நோன்பு
(3) ஹஜ் வணக்கம் (4) சமூக நலச் செயற்பாடு

**8.** "நிச்சயமான தொழுகை மானக்கேடானவற்றிலிருந்து தடுக்கின்றது" என்பது
(1) அல்-குர்ஆனின் கூற்று (2) நபி (ஸல்) அவர்களது கூற்று
(3) ஒரு சஹாபியின் கூற்று (4) இமாம் ஷாபிஈ (ரஹ்) அவர்களின் கூற்று

**9.** ஸகாத் நிஸாபை அடைந்த நிலையில் ரூபா 500 000 இலங்கை நாணயத்தை வைத்திருக்கும் ஒருவர் வருட இறுதியில் கொடுக்க வேண்டிய ஸகாத்தின் அளவு
(1) ரூபா 10 000 (2) ரூபா 12 500 (3) ரூபா 15 000 (4) ரூபா 17 500

[பக். 2 ஐப் பார்க்க

Department of Examinations, Sri Lanka
Department of Examinations, Sri Lanka

**10.** சுன்னத்தான நோன்புகளில் ஒன்று
(1) ரமழான் நோன்பு (2) கழா நோன்பு
(3) அரபா நோன்பு (4) கப்பாரா நோன்பு

**11.** ஒருவரிடம் ஒரு வருடம் முழுவதும் 121 ஆடுகள் இருப்பின் அவர் ஸகாத்தாக கொடுக்க வேண்டிய ஆடுகளின் எண்ணிக்கை
(1) ஒன்று (2) இரண்டு
(3) மூன்று (4) நான்கு

**12.** ஹஜ்ஜுக்கு இஹ்ராம் நிய்யத்து வைத்தவர் செய்ய **அனுமதிக்கப்படாத** ஒரு செயல்
(1) குளித்தல் (2) புறம் பேசுதல்
(3) மணம் பூசுதல் (4) சுன்னத்தான தொழுகையை நிறைவேற்றல்

**13.** இறந்த கணவனுக்காக 'இத்தா' அனுஷ்டிக்கும் பெண் கட்டாயம் தவிர்த்துக் கொள்ள வேண்டிய ஒரு விடயம்
(1) உழைக்கச் செல்லல் (2) வைத்தியரைச் சந்தித்தல்
(3) மணம்முடித்தல் (4) உணவு சமைத்தல்

**14.** இஸ்லாமிய ஆட்சியின் நான்காம் கலீபாவாகப் பதவியேற்றவர்
(1) அபூபக்ர் (ரலி) (2) உமர் (ரலி)
(3) உஸ்மான் (ரலி) (4) அலி (ரலி)

**15.** இலங்கை முஸ்லிம்கள் பற்றிய தகவல்களை உள்ளடக்கிய ஒரு நூல்
(1) கலீலா வதிம்னா (2) அஜாகிபுல் ஹிந்து
(3) தஸ்கிரதுல் ஹுப்பால் (4) பிக்ஹுஸ்சுன்னா

**16.** 'இஜ்திஹாத்' என்ற சொல்லின் கருத்து
(1) ஒன்றுகூடுதல் (2) முயற்சித்தல்
(3) ஒருமித்த கருத்தைப் பெறல் (4) ஒப்பு நோக்குதல்

**17.** இஸ்லாமிய சட்டக்கலையைக் குறிக்கும் அறபுச் சொற்றொடர்
(1) இல்முல் பிக்ஹு (2) இல்முத் தப்ஸீர்
(3) இல்முல் அகீதா (4) இல்முல் மீராஸ்

**18.** 'மருத்துவத்தின் தந்தை' என அழைக்கப்படுபவர்
(1) அல்-குவாரிஸ்மி (2) இப்னு பர்னாஸ்
(3) அல்-கிந்தி (4) அலி இப்னு சீனா

**19.** ழஈப் ஆன ஹதீஸ் என்பது
(1) ஆதாரபூர்வமான ஹதீஸ் (2) பலவீனமான ஹதீஸ்
(3) புனைந்துரைக்கப்பட்ட ஹதீஸ் (4) உறுதியான ஹதீஸ்

**20.** தொழுகையில் 'துஆஉல் இப்திதாஹ்' ஓதும் சந்தர்ப்பம்
(1) முதல் தக்பீரின் பின்னர் (2) ருகூவின் போது
(3) சுஜூதின் போது (4) நடு இருப்பின் போது

**21.** அப்பாஸிய கிலாபத்தின் முதல் கலீபா
(1) முஆவியா (ரலி) (2) ஹாரூன் அர்-ரஷீத்
(3) அபுல் அப்பாஸ் அஸ்ஸப்பா (4) முதலாம் அப்துர் ரஹ்மான்

**22.** ஆலிமுல் குறைஷ் என்னும் சிறப்புப் பெயரால் அழைக்கப்படும் இமாம்
(1) இமாம் அபூஹனீபா (ரஹ்) (2) இமாம் மாலிக் (ரஹ்)
(3) இமாம் ஷாபிஈ (ரஹ்) (4) இமாம் அஹ்மதிப்னு ஹன்பல் (ரஹ்)

**23.** உமையாக்களைத் தொடர்ந்து இஸ்லாமிய ஆட்சியைப் பொறுப்பேற்றவர்கள்
(1) முகலாயர்கள் (2) உஸ்மானியர்கள்
(3) அப்பாஸியர்கள் (4) பாதிமீக்கள்

**24.** அறபு மொழியை அரசகரும மொழியாகப் பிரகடனப்படுத்திய உமைய வம்ச கலீபா
(1) கலீபா யஸீத் (2) உமரிப்னு அப்துல் அஸீஸ்
(3) அப்துல் மலிக் (4) வலீத்

[பக். 3 ஐப் பார்க்க

Department of Examinations, Sri Lanka
Department of Examinations, Sri Lanka

**25.** ஒரு பிரிவினரின் மூலதனமும் மற்றொரு பிரிவினரின் உழைப்பும் இணைந்த பொருளாதாரச் செயற்பாடு
(1) முழாரபா (2) முஷாரகா (3) முஸாரஆ (4) முராபஹா

**26.** 'கியாஸ்' என்ற சட்ட மூலாதாரத்தின் ருகூன்கள்
(1) இரண்டு (2) மூன்று (3) நான்கு (4) ஐந்து

**27.** தலாக் சொல்லப்பட்ட பெண்ணின் 'இத்தா'காலம்
(1) 40 நாட்கள் (2) நான்கு மாதங்களும் 10 நாட்களும்
(3) மூன்று சுத்தங்கள் (4) பிரசவம் வரை

**28.** பூமியை வளப்படுத்தும் செயற்பாடு
(1) இமாரத் (2) கிலாபத் (3) த.்.வத் (4) ரிஸாலத்

**29.** திருமண ஒப்பந்தத்திலிருந்து கணவன் மனைவியைச் சட்டரீதியாகப் பிரிவது
(1) பஸ்கு (2) குல்உ (3) ஈலாஉ (4) தலாக்

**30.** கலீபா அபூபக்ர் (ரலி) ஆலோசனைப்படி அல்-குர்ஆனைத் தொகுக்கும் பணியை மேற்கொண்ட நபித் தோழர்
(1) இப்னு அப்பாஸ் (ரலி) (2) ஸைதுபின் ஸாபித் (ரலி)
(3) முஆதுப்னு ஜபல் (ரலி) (4) இப்னு மஸ்ஊத் (ரலி)

**31.** பத்ருப் போரில் கலந்து கொண்ட சஹாபிகளின் எண்ணிக்கை
(1) 300 (2) 313 (3) 1000 (4) 1200

**32.** மக்கா வெற்றி இடம்பெற்ற ஆண்டு
(1) ஹிஜ்ரி: 5 (2) ஹிஜ்ரி: 6 (3) ஹிஜ்ரி: 7 (4) ஹிஜ்ரி: 8

**33.** நோன்பு கடமையாக்கப்பட்ட ஆண்டு
(1) ஹிஜ்ரி: 1 (2) ஹிஜ்ரி: 2 (3) ஹிஜ்ரி: 3 (4) ஹிஜ்ரி: 6

**34.** மினா, ஸபா, மர்வா, முஸ்தலிபா ஆகிய இடங்களுடன் தொடர்புபடும் வணக்கம்
(1) உம்ரா (2) ஸவ்ம் (3) ஹஜ் (4) ஸலாத்

**35.** நபி (ஸல்) அவர்கள் மக்காவில் வாழ்ந்த காலம்
(1) 10 வருடங்கள் (2) 40 வருடங்கள் (3) 53 வருடங்கள் (4) 63 வருடங்கள்

**36.** 'கிதாபுல் ஹயவான்' என்ற நூலின் ஆசிரியர்
(1) அல்ஜாஹிஸ் (2) அர்-ராஸி (3) இப்னு நபீஸ் (4) கலன்

**37.** கீழே **'அ'** நிரலில் நூலாசிரியர்கள் சிலரின் பெயர்களும் **'ஆ'** நிரலில் அவர்களால் எழுதப்பட்ட நூல்கள் சிலவற்றின் பெயர்கள் தரப்பட்டுள்ளன.

| நிரல் 'அ' | நிரல் 'ஆ' |
|---|---|
| (i) - இமாம் ஷாபிஈ (ரஹ்) | A - முஅத்தா |
| (ii) - இமாம் அபூஹனீபா (ரஹ்) | B - ஸஹீஹுல் புஹாரி |
| (iii) - இமாம் புஹாரி (ரஹ்) | C - கிதாபுல் உம்மு |
| (iv) - இமாம் மாலிக் (ரஹ்) | D - பிக்ஹுல் அக்பர் |

மேலே **'ஆ'** நிரலிலுள்ள நூல்களின் பெயர்களை **'அ'** நிரலிலுள்ள நூலாசிரியர்களின் பெயர்களுடன் ஒழுங்க முறையில் தொடர்புபடுத்தினால் வரும் சரியான விடையைத் தெரிவுசெய்க.
(1) A C B D (2) A C D B (3) B D A C (4) C D B A

● **38** முதல் **40** வரையுள்ள வினாக்களுக்கு கீழ்வரும் நிகழ்வை அடிப்படையாகக் கொண்டு விடை தருக.

மரணப்படுக்கையில் இருக்கும் ஒருவர் தனக்குச் சொந்தமான ஆறு இலட்சம் ரூபாவிலிருந்து 1/2 பகுதியை தர்மம் செய்யுமாறும் மீதியுள்ள பணத்தை உறவினர்களுக்கிடையில் பகிர்ந்தளிக்குமாறும் கட்டளையிட்டு விட்டு மரணித்துவிட்டார். இங்கு

**38.** தர்மம் என்பதைக் குறிக்கும் அறபுச் சொல்
(1) நுஸ்ரத் (2) வக்பு (3) ஸதகா (4) தஸ்கியா

**39.** தர்மம் செய்யுமாறு அம்மனிதர் கட்டளையிட்டதைச் சுட்டும் அறபுச் சொல் யாது ?
(1) வராஸத் (2) வஸிய்யத் (3) வகாலத் (4) அமானத்

**40.** இஸ்லாமிய சட்டத்தின் அடிப்படையில் அம்மனிதரின் முழுச் சொத்திலிருந்தும் தர்மம் செய்வதற்கு அங்கீகரிக்கப்பட்ட தொகை
(1) ஒரு இலட்சம் ரூபா (2) இரண்டு இலட்சம் ரூபா
(3) இரண்டு இலட்சத்து ஐம்பதாயிரம் ரூபா (4) மூன்று இலட்சம் ரூபா



Department of Examinations, Sri Lanka
Department of Examinations, Sri Lanka

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව / முழுப் பதிப்புரிமையுடையது / All Rights Reserved]

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

16 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2015 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2015 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2015

ඉස්ලාම් I, II
இஸ்லாம் I, II
Islam I, II

## இஸ்லாம் II

※ **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, மொத்தமாக **ஐந்து** வினாக்களுக்கு மாத்திரம் விடை எழுதுக.

※ முதலாம் வினாவின் விடைக்கு **20** புள்ளிகளும் ஏனைய ஒவ்வொரு வினாவின் விடைக்கும் **10** புள்ளிகள் வீதமும் வழங்கப்படும்.

**1.** சுருக்கமான விடை தருக.

(i) ஈமானியப் பண்புகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) நாம் தினமும் ஓத வேண்டுமென நபி (ஸல்) அவர்கள் குறிப்பிட்ட **இரண்டு** சூராக்களை எழுதுக.

(iii) இரவில் நிறைவேற்றப்படும் சுன்னத்தான தொழுகைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(iv) ஸகாத் பெறத் தகுதியான **இரண்டு** பிரிவினரைப் பெயரிடுக.

(v) இஸ்லாம், பெண்களுக்கு வழங்கியுள்ள உரிமைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(vi) இஸ்லாமிய சட்டக்கலை அறிஞர்கள் **இருவரது** பெயர்களைத் தருக.

(vii) பொருளீட்டலின்போது தடை செய்யப்பட்டுள்ள **இரண்டு** விடயங்களைக் குறிப்பிடுக.

(viii) 'ஷிர்க் அஸ்கருக்கு' **இரண்டு** உதாரணங்கள் தருக.

(ix) ஆண்களுக்கு மணம்முடிக்க ஹராமான **நான்கு** உறவினர்களைப் பெயரிடுக.

(x) அநந்தரச் சொத்தில் பங்கு பெறத் தகுதியான **இருவரைக்** குறிப்பிடுக.

**2.** (i) ஈமானைப் பலவீனப்படுத்தும் காரணிகள் **இரண்டை** எழுதுக.

(ii) நம்பிக்கை சார்ந்த குப்ருக்கு **மூன்று** உதாரணங்கள் தருக.

(iii) 'தயம்மும்' செய்யும் முறையை விளக்குக.

**3.** (i) திருமணத்தின் 'பர்ளுகள்' **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) பிள்ளைகள் தம் பெற்றோருக்குச் செய்ய வேண்டிய கடமைகள் **மூன்றை** எழுதுக.

(iii) தொழுகையின் முக்கியத்துவத்தை விபரிக்க.

**4.** (i) இஸ்லாத்தின் துணை மூலாதாரங்கள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) ஹதீஸ் ஒரு சட்ட மூலாதாரம் என்பதற்கு ஆதாரங்கள் **மூன்று** தருக.

(iii) ஸகாத்தின் மூலம் கிடைக்கும் பயன்கள் **ஐந்தைக்** குறிப்பிடுக.

**5.** (i) ஒரு முஜ்தஹித் பெற்றிருக்க வேண்டிய தகைமைகள் **இரண்டைக்** குறிப்பிடுக.

(ii) பிரதான குற்றச்செயல் **மூன்றையும்** அவற்றிற்குரிய தண்டனைகளையும் குறிப்பிடுக.

(iii) ஹுதைபிய்யா உடன்படிக்கையின் நிபந்தனைகள் **ஐந்தைச்** சுருக்கமாக விளக்குக.

**6.** (i) ஒரு வியாபாரம் அங்கீகரிக்கப்படுவதற்கு வியாபாரப் பொருள் பெற்றிருக்க வேண்டிய தன்மைகள் **இரண்டை** எழுதுக.

(ii) இஸ்லாம் தடை விதித்துள்ள உணவு வகைகள் **ஆறைக்** குறிப்பிடுக.

(iii) ஹிஜ்ரத் நிகழ்வை விபரிக்க.

**7.** (i) ஆரம்பத்தில் இலங்கையில் முஸ்லிம்கள் குடியேறி வாழ்ந்த இடங்கள் **இரண்டைப்** பெயரிடுக.

(ii) தேசிய நலனுக்கு இலங்கை முஸ்லிம்கள் ஆற்றியுள்ள பங்களிப்புகள் **மூன்றைக்** குறிப்பிடுக.

(iii) இஸ்லாமிய கிலாபத்தில் உமையாக் காலப்பிரிவில் நிகழ்ந்த முக்கிய நிகழ்வுகள் **ஐந்தைச்** சுருக்கமாக விபரிக்குக.

* * *

Department of Examinations, Sri Lanka